[4th May 1962

அன்னிய நாட்டிலிருந்து நல்ல ஆராய்ச்சியாளர்களை வரவழைத்து, உடனடியாக இந்தப் பூச்சித் தொல்லையைக் கட்டுப்படுத்த அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இதுபற்றி ஆராய்ச்சி செய்ததன் விளைவாக ஏற்பட்ட நன்மைகளை ஏற்கனவே நான் சொன்னேன். இப்பொழுதிருக்கும் நிலைமையில் பூச்சித் தொல்லையைக் கட்டுப் படுத்த ஆவன செய்யப்பட்டு வருகிறது. இதில் மேற்கொண்டு பரிசிலனை செய்யப்பட்டு வருகிறது.

*Water-supply (Madras City)*

*26 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Health be pleased to state :—

(*a*) whether any representations have been made to the Government of Andhra Pradesh for approving the schemes for the supply of water to Madras City from Sangam Anicut in Nellore district; and

(*b*) if so, whether any reply has been received?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (*a*) Yes, Sir.

(*b*) Andhra Government have replied, that the construction of Somasila Dam has not been included in the Third Five-Year Plan and as such the question of supplying water from Somasila Dam to Madras does not arise now.

SRI M. KALYANASUNDARAM : இந்தத் திட்டத்தை எடுத்துக் கொள்வதற்குக் காலதாமதம் ஆகும் என்றால், சென்னை நகரத்தின் குடிதண்ணீர் வசதியைப் பெருக்குவதற்காக இடைக்காலத் திட்டங்கள் இருந்தனவே, அவற்றை எடுத்துக் கொண்டு நிறை வேற்ற உத்தேசம் உண்டா ? பூண்டியிலிருந்து தண்ணீர் பாயக் கூடிய ஆயக்கட்டுகளை விவசாயிகளிடமிருந்து சர்க்காரே வாங்கி, தண்ணீர்ச் சேதத்தைத் தடுப்பது என்ற திட்டம் இருந்ததே, அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : நட வடிக்கை இன்னும் எடுக்கப்படவில்லை. பார்ட்-2 ஸ்கீமில் நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Is not "water-supply to the City" one of the terms of reference to he Gulhati Commission?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : Yes, Sir.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கோதாவரி, கிருஷ்ணா தண்ணீரைக் கொண்டுவர முயற்சி எடுக்கப்படுவதாக செய்தித் தாளில் பார்த்தோமே, அந்தத் துறையிலே அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்திருக்கிறதா ?

4th May 1962]

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : முயற்சி எடுப்பதற்கு இப்பொழுதுதான் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குள்ளாக, திட்டமாக எதுவும் சொல்வதற்கில்லை.

SRI K. A. MATHIALAGAN : அண்மையில் உதகையில் கூட இருக்கிற தென் மண்டல கவுன்சிலில் இது சம்பந்தமாக, அண்டை இராச்சியங்களான ஆந்திரம், கேரளம் ஆகியவைகளை வற்புறுத்து வதற்கு நம்முடைய பிரதிநிதிகள் ஏதாவது திட்டம் கொண்டு போகிறார்களா? இல்லாவிட்டால் திட்டம் ஏதாவது தயார் செய்வார்களா?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : தலைவர் அவர்களே, திட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆந்திரா விலிருந்தும், மற்ற அரசாங்கத்திலிருந்தும் பதில் எதிர்பார்க்கப் படுகிறது.

SRI SAW. GANESAN : காவிரித் தண்ணீரை இங்கு கொண்டு வருவதற்கு முயற்சி செய்யப்பட்டதே, அது பலனுடையதாக இருக்கிறதா? அப்படியானால் இந்த முறை சௌகரியமாகக் கைக்கொள்ளப்பெறுமா?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : காவிரி ஜலம் கொண்டு வருவதற்கான திட்டம் இன்னும் பரிசிலனையில் இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : காவிரியில் இருந்து தண்ணீர் கொண்டு வருவது அதிகச் செலவுள்ளதாகவும், கடினமானதாகவும் இருக்கும். அதைவிட மலிவான செலவில், சுலபமாக நெல்லூர் திட்டத்திலிருந்து தண்ணீர் கொண்டுவர முடியும் என்று நிபுணர்கள் கூறுகிற காரணத்தினால் ஆந்திர அரசாங்கமும், நம்முடைய அரசாங்கமும் சேர்ந்து சோமசிலா திட்டத்தை சீக்கிரமாகக் கொண்டுவருவதற்கு மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்துவார்களா?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : நெல்லூர் திட்டம் மூன்றாவது திட்டத்தில் இல்லாத காரணத்தினால் அப்படி சீக்கிரம் அது வருமென்று சொல்வதற்கில்லை.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*— **An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## III.—INFORMATION REGARDING QUESTIONS.

SRI K. A. MATHIALAGAN : Sir, on a point of order. Under Rule 22 of the Assembly Rules, the first hour of every sitting shall, unless the House unanimously resolves otherwise, be available for the asking and answering of questions.

முதல் ஒரு மணி நேரம் கேள்விகளுக்காக ஒதுக்கப் பட்டிருந்தும் 20 நிமிடங்களில் கேள்விகள் முடிவடைந்து